# அன்பு நிலய நூல்கள்

## யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

இயற்றியவை

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| திருக்குறளின்பம் (4-ஆம் பதிப்பு) | 3 | 0 |
| இளிச்சவாயன் - ஹ்யூகோவின் ஃபிரெஞ்சு நாவல்— (2-ஆம் பதிப்பு) | 3 | 0 |
| இனிய தமிழ் இலக்கணம் | 3 | 4 |
| சிவஞான தீபம் | 2 | 4 |
| வளையாபதி அகவல் | 0 | 12 |
| குண்டலகேசி அகவல் | 0 | 4 |
| குண்டலகேசி நாடகம் | 0 | 12 |
| ஜயமணி (அரிய சமுதாய நாடகம்) | 1 | 4 |
| இராணி மங்கம்மாள் (வீரச்சுவை நாடகம்) | 0 | 12 |
| விவேகானந்தம் (சரித்திர நாடகம்) | 1 | 0 |
| பைந்தமிழ்ச் சோலை | 0 | 8 |
| திருக்காட்சி (2-ஆம் பதிப்பு) | 0 | 6 |
| முத்துத் தாண்டவர் | 0 | 2 |
| காவடிச்சிந்து அண்ணாமலை ரெட்டியார் | 0 | 3 |
| சதாசிவ ப்ரம்மம் | 0 | 2 |
| சுவாமி இராமதீர்த்தர் | 0 | 2 |
| குழந்தை இன்பம் | 0 | 6 |
| சாது ஜவானி (அரிய இனிய பிரெஞ்சுக் கதை) | 0 | 6 |
| பராசக்தி அர்ச்சனை | 0 | 3 |
| நாடகமணி மோலியர் | 0 | 13 |
| அற்புதப் பெண்மணி-மேரி-கூரி | 1 | 0 |
| முருகன் வழிபாடு | 0 | 4 |
| ஸ்ரீ சங்கர விஜயம் | 0 | 5 |
| இன்பமாலை (3-ஆம் பதிப்பு) | 1 | 0 |
| தமிழிசை முழக்கம் | 0 | 9 |
| யோகசித்தி (தெலுங்கு மொழி பெயர்ப்பு அச்சில்) | ...... | |

அன்பு நிலயம்

இராமச்சந்திரபுரம் (போஸ்ட்)

திருச்சி ஜில்லா, S. INDIA

புலவர் பெருமான்

# மீனாட்சிசுந்தரம் பிள்ளை

விவேகானந்த புத்தகசாலை
ஹிந்து மதாபிமான சங்கம்
காரைக்குடி.



புலவர் பெருமான்

# மீனாட்சிசுந்தரம் பிள்ளை

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்



அன்பு நிலயம்

இராமச்சந்திரபுரம் : திருச்சி ஜில்லா

# பதிப்புரை

தமிழ்ப் பெரியார் தொகுதியில், திரிசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளையை முன்னணியில் வைக்கவேண்டும். அவர் ஒப்புயர்வற்ற புலவர், பெருங்கவி, சிவநேசச் செல்வர், ஒழுக்கத்திற் சிறந்த உத்தமர்; எளிய நடையும் பெரிய சிந்தனையுங் கொண்டவர்; அக்காலப் புலவர்களின் வணக்கத்தைப் பெற்றவர்; தமிழுக்கே உயிர்த்தவர். அத்தகைய பெரியாரின் வரலாற்றையும் புலமைத் திறனையும் இக் குறுஞ்சுவடி திட்ப நுட்பமாக ஆராய்கிறது. இதை எழுதிய யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் தமது இளமையிலேயே அக்காலத் தமிழ்ப் புலவர் வாயிலாக, பிள்ளையவர்களின் அருமை பெருமையை நன்கு அறிந்தவர்கள்.

இராமச்சந்திரபுரம்,
10—6—1944.

அன்பு நிலயத்தார்.

அசு-க-து

# பொருளடக்கம்

# புலவர் பெருமான்
# மீனாட்சி சுந்தரம் பிள்ளை

## க. மாபெரும் புலவர்

"மரகதப்பொன் சிமயவெற்பு நிகர்தழைக்கும்
வடிவி முத்தந் தருகவே!
மழைமுகிற்கண் டெழுபசுத்த மடமயிற்கு
நிகரன் முத்தந் தருகவே!"

ஆ, எப்படி யிருக்கிறது சந்தம்! மொழிக்கோவையும் இசை யெழுச்சியும் யாப்பமைதியும் எவ்வளவு நயமா யமைந்திருக்கின்றன! முத்தங் கொஞ்சும் முத்தமிழ் நடை! "அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்" முத்தப் பருவத்தில் இரண்டு வரிகளே இவை. இவற்றைக் கேட்டதும் பழக்கமுள்ள புலவர் "ஆ, மீனாட்சி சுந்தரம்பிள்ளை வாக்கிற்கு எதுவும் இணையில்லை" என்பார்கள்.

சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டின் மாபெரும் புலவர், திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையே யாவார். கம்பனுக்குப் பிறகு ஒரு பெருங்கவியைச் சொல்லவேண்டுமானால், இவரையே தமிழறிந்த புலவர் ஒப்புக்கொள்வார்கள். சேக்கிழாருக்கும் கச்சியப்பருக்கும், சிவஞான யோகிகளுக்கும் பிறகு, ஒரு சிவபக்திகொண்ட செஞ்சொற்கவியைக் குறிக்கவேண்டுமானால், மகா வித்துவான் மீனாட்சி

சுந்தரத்தைத் தவிர வேறு யாருமில்லை எனலாம். மீனாட்சி சுந்தரம்பிள்ளை பிறவிக்கவி; கருவிலே திருவுடைய தமிழ்ப் புலவர், தமிழ் மொழியை ஐயந்திரிபறக் கற்றுத் தேர்ந்தவர்; தாம் கற்றதைப் பல மாணவருக்குப் புகட்டித் தமிழ்க்கலையை வாழையடி வாழையாக வாழவைத்தவர். பாடம் சொல்லுவதில் அவருக்கு நிகரேயில்லை. தமிழிலுள்ள எந்த ஐயத்தையும் இவர் அக்காலம் தீர்த்துவைத்து, நூற்றுக்கணக்கான புலவர்களின் வணக்கத்தையும் அன்பையும் பெற்றார். படிப்பில் மட்டுமன்று, ஒழுக்கத்திலும் இவர் பிறருக்கு அரிய உதாரணமா யிருந்தார். எல்லாரிடமும் நேசப்பான்மை, உள்ளன்பு, கல்விச் செருக்கற்ற பணிவு, தற்புகழ்ச்சி யின்மை, எல்லாரையும் மதித்து நடத்தல், யாரையும் புண்படுத்தாத சாத்வீகம், தம்மைப் பகைத்துத் தூற்றியவரிடமும் பொறுமையான பேச்சு, நிதான நடை—இவையெல்லாம் புலவர் சிங்கமான பிள்ளையவர்களின் புகழ்மகுடத்தில் நற்குண மணிகளாகப் பொலிந்தன. இவர் புகழைத் தேடவில்லை; புகழ் இவரைத் தேடிவந்தது! இவர் பொன்னைச் சேர்க்கவில்லை. இறுதிமட்டும் வறுமையிலேயே வாழ்ந்தார்: பொன்னும் மணியும் இவரைச் சரண்புகுந்தன. ஆனால் வந்ததையெல்லாம் தமிழுக்கே செலவிட்டு, எளிய முறையிலேதான் இவர் வாழ்ந்தார். இவர் புகழ் தமிழகத்தைத்தாண்டி நாடெங்கும் பரவி யிருந்தது. ஒருமுறை இலண்டனிலிருந்து "மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, இந்தியா" என்று முகவரியிட்ட கடிதம் ஒன்று நேராக இவருக்கே வந்து சேர்ந்தது. உண்மைதானே, இந்தியாவிலேயே தாய்மொழிக்கென்று வாழ்ந்த

புலவருள் இவரை ஒப்பாரும் மிக்காரும் இலர். இவர் அக்காலம் போற்றி எட்டில் தீட்டிவைத்த பழஞ் சுவடிகளே இன்று நமக்கு நூல்வடிவாகக் கிடைக் கின்றன. இவர் அக்காலம் மாணவருக்காக வகுத்த உரைவிளக்கங்களாலேதான் வழி வழியாகத் தமிழ் நூல்களை இன்றும் புலவர் அறிகின்றனர். "தமிழைக் காத்த பெருமான், புலவர் முதல்வன், கவிக் கார் மேகம், செந்தமிழ்க் குருநாதன், சிவனெறிச் செல் வன், விற்பன சிகாமணி, கருணை மூர்த்தி, இணை யிலாப் புலவன், மெய்ஞானக் கடல், புலவர் ஏறு" என்று எத்தனையோ புலவர்சிகாமணிகள் பிள்ளை யவர்களை அக்காலம் போற்றினர்கள். இக்காலமும் பிள்ளையவர்கள் பெயரைச் சொன்னல், உண்மைத் தமிழர் கையெடுத்துக் கும்பிடுவர் !

இப்படி மீனட்சி சுந்தரனரிடம் அன்புபூண்டு அவரை அக்காலம் பார்த்துப் பேசிய நான்கு புலவர் களை நான் அறிந்து, அவர்களுடன் பழகியதுண்டு. அவருள் முதன்மையானவர், எனது தமிழாசிரியர் தெய்வசிகாமணிப் புலவர். அவர், "கவிக்குப் பிறந்த புலவர்சிங்கம் மீனட்சி சுந்தரம் பிள்ளையே; கம்ப னுக்குப் பிறகு அவரே மாபெருங்கவி ! அவர்போலப் பாடுவது எளிதன்று" என்பார். மற்ருெரு புலவர், எனக்குப் பள்ளியாசிரியரா யிருந்தார். அவர் கும்ப கோணம் கல்லூரியில் கோபால்ராவ் காலத்தில் தியாகராச செட்டியாரிடம் படித்தவர் ; தியாகராசர் வாயிலாக மீனட்சிசுந்தரம் பிள்ளையின் அருமை பெரு மைகளை அறிந்து, அடிக்கடி போற்றிப் புகழ்ந்து வந் தார். மற்ருெருவர், தஞ்சை ஸ்ரீநிவாசம்பிள்ளை. நான் சமரஸபோதினி நடத்தியபோது, இவர் நட்புரிமை

கிடைத்தது; இவரிடம் அடிக்கடி சென்று தமிழ்க் கலையைப்பற்றிப் பேசுவதுண்டு. இவர் தியாகராச செட்டியாரின் அருமை மாணவர். இவர், பிள்ளை யவர்களையும் பார்த்துப் பழகியவர். நான் இவரைப் பார்த்தபோதெல்லாம், "பிள்ளையவர்கள் வற்ருத் தமிழ்க் கடல்" என்பார். அனைத்தினும் மேலாக நமது பெரும் பேராசிரியர் டாக்டர் சாமிநாதையர், தமது ஆசிரிய ரான பிள்ளையவர்களின் விரிவான வரலாற்றையும், பிரபந்தங்களையும் நமக்குத் தொகுத்தளித்தார்கள். நான் அறிந்ததையும் படித்ததையும் இச்சிறு தேன் கூட்டில் கொண்டுவந்து சேர்க்கிறேன். தமிழ் வண் டுகள் நுகர்க!

## உ. சிதம்பர வாத்தியார்

பிள்ளை யவர்களின் தந்தை, சிதம்பரம் பிள்ளை; தாயார் அன்னத்தாச்சி. இருவரும் அன்பும், சிவநெறிச் செல்வ மும், பொறுமையுங் கொண்டு இல்லறங் காத்தனர். சிதம்பரனுர் மீனுட்சி கோயிலில் முத்திரைக் கணக் கரா யிருந்தார். அவர் கல்வி கேள்விகளிலும், கவி பாடுவதிலும் வல்லவர்: முறையாகத் தமிழைக் கற்று, முறையாகப் பாடஞ் சொல்லும் திறமை பெற்றிருந் தார். அவருக்கும் கோயில் அதிகாரிகளுக்கும் ஏதோ மனத்தாங்கல் வந்தது. பிள்ளையவர்கள் மீனுட்சி சுந்தரேசரை உள்ளத்திற் கொண்டு, மதுரையை நீத்துத் திருச்சிக்கு அருகேயிருந்த சில கிராமங்களில் தமிழ் சொல்லித்தந்து பிழைத்தார். முதலில் அவர் எண்ணெய்க் கிராமத்தில் தங்கினுர். பிறகு அதவத்தூர் என்னும் கிராமத்தில் ஒரு தமிழ்ப் பள்ளிக்கூடம்

வைத்தார். இவரது ஒழுக்கமும், அறிவும், சொற்றிறனும் எல்லார் உள்ளத்தையும் கவர்ந்தன. இவரைச் சிதம்பர வாத்தியார் என்றே எல்லாரும் அழைத்தனர். பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் ஆகிய இரண்டையும் பாடஞ் சொல்லுவதில் இவருக்குப் பெரும் புகழுண்டு.

## ௩. மீனாட்சிசுந்தரம்

சிதம்பரனார் திருச்சிக்கருகே யிருந்தாலும், அவர் உள்ளம் மதுரை மீனாட்சி சுந்தரேசர் திருவடிக்கருகே தான் இருந்தது. மதுரைக் கடவுளர் அருளால், பவஹு பங்குனிமீ 26உ (6-4-1815) இவருக்கு ஒரு மணிப் புதல்வன் பிறந்தான். தமது குலதெய்வத்தின் பெயரையே அம்மகவுக்குச் சூட்டினார் சிதம்பரர். அம்மகவே, நமது மதிப்பிற்குரிய புலவர்சிங்கமான மீனாட்சிசுந்தரம் பிள்ளை. இவருக்குப் பிறகு சொக்கலிங்கம் என்னும் மகனும், மீனாட்சி என்னும் மகளும், சிதம்பரனாருக்குப் பிறந்தனர். இக்காலம் இவர் சோமரசம் பேட்டையில் பள்ளிக்கூடம் வைத்திருந்தார். பொதுஜனங்கள் இச்சிவநேசப் புலவரை ஆர்வமுடன் போற்றிப் புகழ்ந்து ஆதரித்தனர். இவரிடம் கற்ற பிள்ளைகள் தமிழிலும் கணக்கிலும் சிறந்து விளங்கினர்.

மீனாட்சிசுந்தரமும் ஐந்தாம் ஆண்டில் தந்தையிடமே கல்வி கற்கத் தொடங்கினான். அக்கால வழக்கப்படி நீதி நூல்கள், சதகங்கள், பிள்ளைத்தமிழ்கள், அந்தாதிகள், இலக்கணம், நிகண்டு, ஓலைக் கணக்கு எல்லாம் விரைவாகக் கற்றுத் தேர்ச்சி பெற்றான் மீனாட்சிசுந்தரம். அவனே பள்ளிக்கூடத்தில்

முதல்; அவனே சட்டாம்பிள்ளை; அவனே இளம் புலவன்; வருங்காலக் கவிமணி. மீனாட்சிசுந்தரத்திற்குத் தந்தை தனியாக இலக்கண இலக்கியங்களைக் கற்பித்தார். நன்னூல், நைடதம், பழங் காப்பியங்கள், பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கம்ப ராமாயணம் முதலிய சீரிய நூல்களைத் தந்தை புகட்டப் புகட்ட மைந்தன் இன்னும் இன்னும் என்று மனக்களஞ்சியத்தில் வாரிச் சேர்த்தான். பாடம் கேட்டதெல்லாம் அவனுக்கு மனப்பாடந்தான். பாடமான செய்யுளைப்போலெல்லாம் சுயமாகப் பாடினன் மீனாட்சி சுந்தரம். அக்காலம் அச்சுநூல் அரிது; காகிதமும் அரிது. ஓலையில் எழுத்தாணி ஓட்டி ஓட்டி, எல்லா நூல்களையும் எழுதி யெழுதியே தந்தை மகிழ மகன் பாடங்கேட்டுச் சிறந்தான். அவன் வாய், எப்போதும் பழங்கவிகளைப் பாடிக்கொண்டிருக்கும்; புதுக்கவிகளையும் புனைந்து காட்டும். இவனது கவித்திறமையைத் தந்தையும் சுற்றியிருந்த புலவர்களும் வியந்து போற்றினர்.

இந்த இளங்கவிமணியின் புகழ், மெல்லத் திருச்சிராப்பள்ளியிற் பரவியது. வீட்டுக்காகச் சாமான் வாங்கச் செல்லும்போதெல்லாம், அங்கங்கே இந்த இளம்புலவனை அழைத்து, "தம்பீ, ஒரு கவி பாடு" என்று சிலர் அன்புடன் கேட்பார்கள். கொடுத்த பொருளைப்பற்றி உடனே கவிபுனைந்து தெளிவாகச் சொல்லி நயமாக விளக்குவான் நமது இளம்புலவன். கேட்டவர் வியந்து பணமும் பண்டமுந் தந்து மகிழ்ச்சியுடன் பையனை அனுப்புவார்கள். ஒருதரம் முருங்கைப்பேட்டை மிராசுதார் தந்த ஈற்றடியை மிகத் திறமையாக முடித்து வெண்பாப் பாடினன் புலவன்.

மிராசுதார், மிக்க மனமகிழ்ந்து ஒரு வண்டி நெல் தந்தனுப்பினர். இவ்வாறு கற்றோரும் மற்றோரும் போற்ற மகன் பெரும் புலவனாக விளங்குவதைக் கண்டு களித்து, தந்தை சிவனடி சேர்ந்தார். பதினைந்தே வயதுடைய மீனாட்சிசுந்தரத்திற்குக் குடும்பப் பொறுப்பு ஏற்பட்டது. ஆனால் ஊரார் ஒரு கவலையுமின்றி வேண்டிய பொருளுதவினர். மீனாட்சிசுந்தரம் தந்தையின் தமிழ்ப்பணியைத் தொடர்ந்து நடத்தி, மேன்மேலும் புகழோங்கினர். தக்க வயதில் இப்புலவர் காவேரியாச்சி என்னும் பெண் மணியை மணந்து, இல்லறம் நடத்தினர். இக்காலம் இவர் திரிசிரபுரம் மலைக்கோட்டை கீழை வீதியில், ஒரு சிறு ஓட்டுவீட்டில் மனைவியுடன் வசித்து வந்தார்.

## ௩. கலையார்வம்

பிள்ளையவர்கள் உள்ளம் எப்போதும் தமிழ்ப்பசி யெடுத்தலைந்தது. அக்காலம் அச்சுநூல்களில்லாமையால், பெரும்புலவர்கள் பழைய நூல்களை ஏட்டில் எழுதி வைத்திருந்தார்கள். அவர்களிடம் மிக்கப் பணிவுடன் சென்று, கட்டளைகளுக்கெல்லாம் உடன்பட்டு, ஏட்டை வாங்கிப் பிரதிசெய்துகொண்டு கற்பன கற்கவேண்டும். நமது புலவர்பெருமான், தமது கல்விப்பசிக்கு எங்கே ஏட்டுணவிருந்தாலும், அங்கே முறைப்படி சென்று, அவரவர் மனப்படி பணிந்து நடந்து, வணக்கமுடன் பாடம் கற்றார். அக்காலம் திருச்சியில் மருதநாயகம்பிள்ளை, அப்பாவையர், ஆறுமுகம்பிள்ளை, வீரராகவ செட்டியார், முத்துவீர உபாத்தியாயர் போன்ற பெரும்

புலவர்கள் தமிழ்த்தொண்டு செய்தனர். அவர்களுக்கு விருப்பமான தொண்டுகளைச் செய்து நமது புலவர் பெருமான் புதியபுதிய பழைய ஏடுகளை வாங்கிப் பிரதி செய்துகொண்டு, இரவும் பகலும் தமிழ்க் கலையை வளர்த்தார்; ஒரு பரதேசியிடம் பிரியமாக நடந்து தண்டியலங்காரம் கற்றார்; கம்பராமாயணத்தைத் தாமே எழுதி யெழுதிப் பாடம் பண்ணினார். தேவாரம் திருவாசகம் முதலிய திருமுறை நூல்களைத் தினந்தோறும் பாராயணம் செய்து, சிவபக்தியை வளர்த்தார். இக்காலம் இவரைச் சில செல்வர் ஆதரித்தனர். இவர் சுற்றியுள்ள திருத்தலங்களுக்குச் சென்று, சிவதரிசனம் செய்துவருவது வழக்கம். கோயில் தர்மகர்த்தாக்கள் இவரை மரியாதைசெய்து, தத்தமது கோயில்களைச் சிறப்பித்துப் பதிகம் பாடச் செய்து சன்மானந் தந்துவந்தனர். எந்தத் தலத்திற்குச் சென்றாலும், இவர் தலபுராணத்தையும் மற்றுமுள்ள சிறப்புக்களையும் கேட்டறிந்து, கவிமாலை தொடுத்து இறைவனுக்கே சூட்டிவந்தார். இவ்வாறே இவர் பாடிய தோத்திரப் பாடல்களும், அந்தாதிகளும், பிரபந்தங்களும் பல. அக்காலம் இவர் பாடிய பாட்டில் தேவார திருவாசகப் பொருள்கள் மலிந்திருந்தன. பிற்காலம் இவர் கவிதைகளை அணிசெய்த கற்பனை நயங்களில்லை. இவரது இளமைக் கவிகளில் திட்டகுடிப்பதிகமும், திருவூறையந்தாதியும், மயில்ராவணன் சரித்திரமும் முதன்மையானவை; திருவூறையூர் பதிற்றுப்பத்தந்தாதியில், திருவாசக நடையைக் காணலாம். இதன் நூறு பாடல்களும் பத்திச்சுவைநனி சொட்டச் சொட்ட அமைந்துள்ளன. ஒன்றைமட்டும் பதம் பார்ப்போம்:

"பெருகு காதலங் கடல்விழுந் தறிவெனும்
பெரிய வங்கமுங் கைவிட்(டு)
உருகு நெஞ்சனய் வினைச்சுரு வுண்ணலூன்
உடல்சுமந்து உழல்வேற்குக்
குருகு மூத்தியர் கண்ணிழல் மீனெனக்
கொத்துதன் பணைச்செந்நெல்
அருகு சென்றன மடையுறும் ஊறைவாழ்
ஐயனே அருள்வாயே!"

இதில் மூன்றும் அடியில் வரும் உவமை கம்பனிற் காண்பது.

## ரு. ஒழுக்கம்

மீனாட்சி சுந்தரனார் சரியான உயரமும், நீள்காமும், நல்ல பருமனும், மாநிற மேனியும், குஞ்சர நடையும், அளந்த சொல்லும், அமைதியான முகப்பொலிவும், மூலகச்ச வேட்டியும், மேலே அங்கவத்திரமும், விபூதி உருத்திராக்ஷந் தரித்த சிவக்கோலமும் உடைய கம்பீரமான புருஷர். இயற்கை வனப்பும், சிறந்த மேலோர் நூல்களும் இவருக்கு மிக்க விருப்பமானவை. இவர் வாழ்க்கையின் ஒவ்வொரு மூச்சும் பயனுள்ள பணியில் ஈடுபட்டிருந்தது. இப் புலவர், காலை நான்கு மணிக்கே எழுந்து காற்றுட உலாவி வந்து வெந்நீரில் குளித்து, தும்பைப்பூப்போல் ஆடையைத் துவைத்துலர்த்தி அணிந்து, அனுட்டானங்களை முடித்து, நெடுநேரம் சிவபூசை செய்வார்; காலையில் உண்ணார். மாணவருக்குப் பாடம் சொல்லி, தேவார திருவாசகங்களைப் பாராயணம் செய்தபிறகே மதியத்தில் உண்பார்; தூய சைவ உணவை மிதமாக இரண்டே வேளைதான் உண்பார்; இரவில் பாலும்

பழமும் உண்பார். நடராஜாவின் குஞ்சிதபாதத்தை இவர் எப்போதும் நெஞ்சில் நினைப்பார்; ஏராளமான பஞ்சாக்ஷரி ஜபம் செய்வார். இவர் முறையாக சைவ தீக்ஷைபெற்று, சிவபூஜையை மேற்கொண்டவர்; மெய்கண்ட தத்துவத்தை ஓதியுணர்ந்து நின்றவர். நாடோறும் ஆறு முதல் பத்துமணிநேரம் இவர் மாணவருக்குப் பாடம் சொல்லிவந்தார். இவரிடம் பாடம் கேட்பதே இன்பம். அளவற்ற அன்பு, பொறுமை, மனமார்ந்த செஞ்சொல், ஈகை, நன்றி முதலிய உயர்ந்த தன்மைகள் இவரிடம் விளங்கின. இவர் தமது அறிவுச் செல்வத்தை எந்த நேரமும் கொள்ளுமட்டும் பிறருக்கு அள்ளிவிட்ட செந்தமிழ் வள்ளலாவார். இவருக்குக் கச்சியப்ப முனிவர் பாடல்களில் ஈடுபாடதிகம்; அம்முனிவரை நினைந்தே பாடத்தொடங்குவார். அவர் அருளிய திருவானைக்காப் புராணம், விநாயகப் புராணம், திருத்தணிகைப் புராணம் முதலியவற்றைப் படித்துப் படித்து, இன்பக் கண்ணீர் விட்டுருகுவார். பழம்பெரும் புலவர் செய்யுட்களை இவர் பொருள்கூறி விளக்கும்போது, அப் புலவர் உள்ளத்துடன் ஒன்றுபட்டு, உணர்ச்சியுடன் தெளிவாகச் சொல்லுவார். இவரிடம் செல்வருக்கும், புலவருக்கும், மாணவர்களுக்கும் பெருமதிப்புண்டானது. எல்லாம் இருபத்தோரு வயதிற்குள்ளேதான். இருபத்தோராம் வயதில் இவர், பல திருத்தலங்களைச் சுற்றி, ஆங்காங்குள்ள புலவர்களையும் கண்டு பேசி மகிழ்ந்து, திருவாவடுதுறைக்குச் சென்றார். அங்கே விளங்கிய குருமூர்த்தி வேளூர் சுப்பிரமணிய தேசிகர் கல்வி கேள்விகளிலும், மெய்கண்ட தத்துவஞானத்திலும் வல்லவர். நமது புலவர் பாமாலை சூட்டி

தேசிகர் சந்நிதானத்தை வணங்கினர். தேசிகர் இவர் கல்வித்திறனையும், கவிநயத்தையும் போற்றி, உரிய மரியாதை செய்தனுப்பினர். திருச்சிக்குத் திரும்பிய தும், இவர் அன்பர் வேண்டுகோட்படியே திருவானைக்கா திரிபந்தாதி, திருச்சிராமலை யமக அந்தாதி, அகிலாண்டநாயகி மாலை, அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களைச் செய்தார்.

## ௯. சென்னைப்புலவர் உறவு

அக்காலம் சென்னையில் புகழ்பெற்ற தமிழறிஞர் இருந்தனர். அங்கே போர்டு (Ford) துரையின் தலைமையில், சென்னைக் கல்விச்சங்கம் ஒன்று நடந்தது. அது தமிழர் அறிவு வளர்ச்சிக்கிசைந்த பல நூல்களை வெளியிட்டுதவியது. அச்சங்கத்திற் பல புலவர் மணிகள் விளங்கினர். அவருள் தலையானவர்கள் தாண்டவராய முதலியார், மழவை மகாலிங்கையர், மதுரைக் கந்தசாமிப் புலவர், இராமசாமி பிள்ளை, இராமநுஜ கவிராயர் முதலியோர். இவர்களுடன் காஞ்சீபுரம் சபாபதி முதலியார், எழும்பூர் திருவேங்கட முதலியார், திருத்தணிகை விசாகப்பெருமாள் ஐயர், திருஅம்பலத்தின்னமுதம் பிள்ளை, அட்டாவதானம் வீராசாமி செட்டியார், அட்டாவதானம் சபாபதி முதலியார் முதலிய பெரும்புலவர் மணிகளும் தமிழறிவுச் சுடர்களாக விளங்கினர்கள். எல்லாரும் இலக்கண இலக்கியங்களில் வல்லவர்கள்; தமிழே உயிர்ப்பானவர்கள்; புலவர்களிடம் அன்பு பூண்டவர்கள். இவர்களையெல்லாம் பார்க்கவேண்டுமென்று நமது புலவர்பெருமான் விரும்பினர். ஆனல் சென்று வரப்பணமில்லை; வறுமை!

திருச்சியில் இவரை ஆதரித்த செல்வர், இலட்சுமணம்பிள்ளை யென்பார். அவருக்குச் சென்னை உயர்தர நீதிமன்றத்தில் ஒரு குடும்பவழக் கிருந்தது. அங்கே தக்க வழக்காளரைக்கொண்டு அதை நிறைவேற்றும் படி நமது புலவரை வேண்டினார். பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோன்றது! புலவர் தமது தமிழ் வேட்கையையும் தெரிவித்தார். 1841-ஆம் ஆண்டு இலட்சுமணம்பிள்ளை தக்க பொருளும் துணையுமீந்து, புலவரைச் சென்னைக்கனுப்பினார். வழியில் சிதம்பர தரிசனம் செய்து, ஆங்காங்குள்ள புலவர்களுடன் அளவளாவி, பிள்ளையவர்கள் சென்னை சேர்ந்தார். அங்கே கோர்ட்டு விவகாரங்களையும் கவனித்துக் கொண்டு, பெரும்பாலும் அரிய புலவர்களைக்கண்டு பேசுவதும், அவர்களிடம் ஏடுகளைவாங்கிப் பிரதி செய்துகொள்வதும், அவர்களுக்குவேண்டிய இலக் கியப் ப்ணிபுரிவதும், புதிய நூல்களைப் பாடம் கேட் பதுமானார், நமது கவிமன்னர். இவர் காஞ்சீபுரம் சபாபதி முதலியாரிடம் புராணங்களிலுள்ள சந்தே கங்களைத் தெரிந்துகொண்டார்; இன்னமுதம் பிள்ளை யிடம் கோவைகளில் உள்ள ஐயப்பாடுகளைக் கேட் டறிந்தார்; திருவேங்கடாசல முதலியாரிடம் கம்ப ராமாயணம், பாகவதம், நாலாயிரப்பிரபந்தம் முதலிய நூல்களில் உள்ள சந்தேகங்களைத் தெரிந்துகொண் டார்; தாமும் பல மாணக்கருக்குப் பாடஞ்சொன் னார். இவருடைய அறிவையும், அடக்கத்தையும் வியந்து புலவர் எல்லா வகையிலும் உதவி செய்தனர்.

## எ. அகிலாண்டநாயகி பிள்ளைத் தமிழ்

மேற்சொன்ன மூன்று புலவரும் முதன்மையாக நமது கவிமன்னரை அடிக்கடி கண்டு, உறவு கொண்டு, தமிழ்விருந்துண்டனர். ஒரு நாள் மூவரும் இவரை மழவை மகாலிங்கையரிடம் அழைத்துச் சென்று, அறிமுகப்படுத்தினார்கள். ஐயர் இலக்கணப்புலி, நிமிஷகவி; தமிழும் ஆங்கிலமும் அறிந்தவர். நமது புலவர் அடக்கமாகவே அவர் கேள்விகளுக்குப் பதிற்சொல்லி, தமது அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ் தாலேலப்பருவத்திலிருந்து ஒரு பாட்டையும் நிதானமாகச் சொல்லிப் பொருள் கூறினார்.

"தரணி மிசைப்பொலி தருமக் குயிலே
தாலே தாலேலோ;
தழையுந் தந்தி வனத்தமர் மயிலே
தாலே தாலேலோ!"—

என்னும் அடிகளைக் கேட்டுப் பரவசமெய்தி, இது இந்த இளம் புலவர் வாக்கென்றறிந்ததும், துள்ளிக் குதித்து, இன்னும் இன்னும் என்று பல பாடல்களைப் பாடச்சொல்லிக் கேட்டார். முடிவில், "அக்காலம் குமரகுருபரர், பகழிக்கூத்தர் முதலியோர் இயற்றிய பிள்ளைத்தமிழ்களைக்கூட, தமிழாராய்ச்சியும் நற்குணமும் மிக்க மீனாட்சிசுந்தரனார் பிள்ளைத் தமிழ் பிறகிடச்செய்ததே!" என்னும் பொருளில் ஒரு விருத்தம் புனைந்துரைத்தார்; அந்த அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழை உடனே அச்சிடவும் ஏற்பாடு செய்தார். சுமார் பதினைந்து பெரும்புலவர் வழங்கிய சிறப்புப்பாயிரங்களுடன், 1842-ஆம் ஆண்டு அகி

லாண்ட நாயகி பிள்ளைத்தமிழ் அச்சேறி வெளிவந்ததும், தமிழகமெல்லாம் புகழ்பெற்றது.

ஓராண்டு சென்னையில் இருந்து காரியத்தை முடித்துக்கொண்டு, தமிழ்விருந்தருந்தி, புலவர்களிடம் பிரியாவிடைபெற்று, நமது கவிமன்னர் திருசிரபுரந் திரும்பினார். அதுமுதல் சென்னை வித்துவான்களும் பிள்ளையவர்களை நாடி வந்தனர். அஷ்டாவதானம் சபாபதிமுதலியார் சேதுயாத்திரை செய்துகொண்டு திருச்சிக்கு வந்து இவர் முன்னிலையில் தமது அவதானத்தைக் காட்டினார். பிள்ளைவர்கள் தமது மாணவரான சுப்பராய செட்டியாரைப் பதினாறு அவதானம் செய்யப்பழக்கினார். காஞ்சீபுரம் சபாபதி முதலியார், நமது புலவரை உயிரென நேசித்தார்; அடிக்கடி இவரைச் சென்னைக்கு அழைத்தார்.

1854-ஆம் ஆண்டு, இவர் புறப்பட்டு, பட்டீசுரம், ஆவடுதுறை, தருமபுரம், சிதம்பரம், பாதிரிப்புலியூர் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு சென்னைக்கு வந்தார். சபாபதி முதலியார், விநாயக முதலியார் முதலியவர்கள் மகிழ்வுடன் உபசரித்து, புலவர்பிரான் இயற்றிய பிரபந்தங்களை ஆவலாகப் பருகிப் பேரின்பமடைந்தனர். அன்பர் வேண்டுகோளுக்கிணங்கி, பிள்ளையவர்கள் வியாசக்கோவை, திருமயிலைப்புராணம், சிதம்பரேசர்மாலை முதலிய நூல்களைச் செய்தார். கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர், சிவஞான யோகிகள் முதலிய பெரியார்கள் இருந்த இடங்களையெல்லாம் பார்த்துப் பாமாலை சூட்டிப் பணிந்தார்; புலவர்களிடம் இருந்த புதிய நூல்களை எட்டுப்பிரதி செய்து

கொண்டு ஊருக்குத் திரும்பினர்; வழியில் சிதம்பர தரிசனம் செய்தார். இச்சமயமே இவர் இராமலிங்க சுவாமிகளைக் கண்டு, அருட்பாகேட்டு மகிழ்ந்தார். மூன்றுவது முறை திருமயிலைப்புராணத்தை அரங் கேற்ற இவர் சென்னைக்குப் புறப்பட்டு, சீர்காழிக்கு வந்தார். சீர்காழியில் வேதநாயகம் பிள்ளை, இவரது மாணவர்; இவரை நன்கு உபசரித்துத் தேவையான தெல்லாம் அளித்தார். பிள்ளையவர்கள் அங்கே சீர்காழிக்கோவை பாடி அரங்கேற்றி, நல்லசன்மா னம் பெற்றுத் திரும்பினர். பணத்தை உத்தேசித்தே சென்னைக்குப் புறப்பட்ட புலவருக்குக் காழியப்பர் வேண்டியதைத் தந்துவிட்டார். பிறகு சென்னை செல்லவில்லை. இப்போது இவருக்கு வயது நாற் பத்தைந்து.

## அ. தேவராஜ பிள்ளை

புலவர் புகழ் தமிழகமெல்லாம் பரந்தது. எத் தனையோ அறிஞர் பாடங்கேட்க வந்தனர். மாணவர் தொகை அதிகரித்தது. இதுகாறும் பிள்ளை யவர்கள் சிறிய வாடகை வீட்டிலேயே வசித்தார். திருச்சி அருணசலம் முதலியார் மலைக்கோட்டை தெற் குத் தெருவில் இருந்த தமது மாடிவீட்டைப் பிள்ளை யவர்கள் உபயோகத்திற்கே கொடுத்து விட்டார். அந்த வீட்டில் நமது புலவர் நன்மாணக்கரை வர வேற்றுப் பாடம் சொல்லி வந்தார். மாணவருக்கு உண்டி, உடை உறையுள்கூடத் தந்து தமிழறம் புரிந்தார் இவ்வள்ளல். இவரிடம் பாடங்கேட்ட மாணவர்கள் பெரும் புலவரானர்கள். இப்புல வரைப் பல வெளியூரார் பாடஞ்சொல்ல அழைத்து

வந்தனர். அவருள் பங்களூர் தேவராஜ பிள்ளை முதன்மை யானவர்; தேவராஜர், மைசூர் துபாஷி, பெரிய செல்வர், அன்புவள்ளல், ஈகைசெறிந்த புகழினர், தமிழார்வங் கொண்டவர். நமது புலவர் பெருமானை வணக்கமுடன் வரவழைத்து தேவராஜபிள்ளை இலக்கண இலக்கியங்களைக் கருத்துடன் பாடங்கேட்டு அறிவோங்கினர்; அவருக்கும் ஆசிரியர்போலவே செய்யுள் செய்யவேண்டுமென்றிருந்தது. அவர் கன்னடத்திலுள்ள குசேலோபாக்யானத்தைத் தமிழ்ச் செய்யுளாக இயற்ற வெகுபாடுபட்டார். ஒரு செய்யுளுக்கு எத்தனையோ மணிநேரம் பாடுபட்டும் காகிதக் குப்பைபோட்டதே பயன்! நமது புலவர் இதைப்பார்த்து, "குசேலர் வரலாறு" உரை நடையை ஒருதரம் படித்துவிட்டு நாளைக்கு ஐம்பது அறுபதென்று, கவிபாடி நூலை எளிதில் முடித்துக் கொடுத்தார். பிறகு, சூதசம்ஹிதையையும் அவ்வாறே முடித்துக்கொடுத்தார்; இரண்டு நூல்களையும் தேவராஜ பிள்ளையின் பெயராலேயே வெளியிடச் சொல்லிக்கொடுத்துவிட்டார். தேவராஜர், தேவதா விசுவாசத்துடன் பிள்ளையவர்களுக்கு ஐயாயிரம் ரூபாய் காணிக்கையளித்து, வணங்கி, சிறப்புகள் செய்து ஊருக்கனுப்பினர். "குசேலோபாக்யானம்" 1850-ஆம் ஆண்டிலும், சூதசங்கிதை 1855-ஆம் ஆண்டிலும் வெளிவந்தன. பிள்ளையவர்களே சிறப்புப் பாயிரம் அளித்தார். ஆசிரியர் பெயர்மட்டும் தேவராஜபிள்ளை என்றிருந்தது.

இரண்டும் சிரஞ்ஜீவி நூல்கள். தமிழ் உள்ள மட்டும் இவை புகழ்பெற்று விளங்கும். சூதசங்கிதை உள்ளறிவுச் சுரங்கம்; அதை மெச்சாத ஞானி

களில்லை. கோடகநல்லூர் சுந்தரசாமிகள் அதைப் பாடம் பண்ணித் தமது பிரசங்கங்களில் வழங்கினர். மகா வைத்திநாதையரும் அந்நூலைப் பாடம் செய்தார். இருவரும் ஒரு தரம் நேராகத் தமது நன்றியைப் பிள்ளையவர்களுக்குத் தெரிவித்தனர்.

குசேலோபாக்யானம், இன்றும் பள்ளிக்கூடங்களில் பாடம் வைக்கப்பெற்று வருகிறது. அதைப் படிக்கும்போது எவர் உள்ளமும் உருகும். உதாரணத்திற்கு ஒரு பாட்டை இங்கே குறிக்கிறேன்:

"பல்லெல்லாந் தெரியக் காட்டிப்
 பருவரல் முகத்திற் கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லி நாட்டித்
 துணைக்கரம் விரித்து நீட்டி,
மல்லெலாம் அகல ஓட்டி,
 மானமென் பதனை வீட்டி,
இல்லெலாம் இரப்ப தன்றோ
 இழிவிழி வெந்த ஞான்றும்!"

இரப்பதன் சொல்லோவியம் எவ்வளவு அழகாக அமைந்திருக்கிறது பாருங்கள்!

## ௬. மாயூரம்

பிள்ளையவர்கள் கையில் பணம் தங்குவதில்லை. அவர் பங்களூரிலிருந்து கொணர்ந்த பெருந்தொகையைக் கடனுக்கும், மாணவர் செலவுக்கும் கொடுத்துத் தீர்த்தார். மறுபடியும் வறுமைதான் பற்றியது. அதற்காகப் புராணங்களும், பதிகங்களும், அந்தாதிகளும், பிள்ளைத் தமிழ்களும் ஏராளமாக இயற்றி அரங்கேற்றிச் சன்மானம் பெற்றுக் குடும்பத்தைப் போற்றி,

மாணவரையும் ஆதரித்தார். பிள்ளையவர்களை வெளியூர் அன்பர் பலர் வரவேற்று உபசரித்து அன்பளிப்புகள் செய்தனர். ஒருமுறை சில செல்வர், இச் செந்தமிழ்ச் செல்வரை மாயூரத்திற்கழைத்து, சொல்லமுதம் பருகித்திளைத்தனர். இவரைத் திருப்பியனுப்ப அவர்களுக்கு விருப்பமில்லை. பத்துப்பன்னிரண்டு செல்வர் சேர்ந்து வீடும், வேண்டிய பொருள்களும் தந்து, திருச்சிப்புலவரை மாயூரவாசியாக்கிவிட்டனர். 1860-ஆம் ஆண்டு முதல், புலவர் மயூரநாதர் சந்நிதியில் இருந்து, தமிழ்ப்பணி யாற்றினார். இச்சமயமே புலவர் வேதநாயகம் பிள்ளையும் மாயூரம் முனிசீபாக (Munsiff) வந்தார். இருவர் நட்பும் அன் போங்கித் தமிழ்ப் பாமலர்களாகப் பூத்தன. மாயூரத்தில் பன்னிரண்டு மாணவர்கள் நிலையாயிருந்து புலவரிடம் பாடங்கேட்டனர். பல வித்வான்கள் அடிக்கடி வந்து பேசிச் சந்தேகங்களைத் தெளிந்து கொண்டனர். மாணவர் பெரும்பாலார் பிள்ளையவர்களுடனேயே உணவுங்கொண்டனர். அவர்களே அவரது செஞ்சொற் கவிகளையும் ஏட்டில் எழுதி வந்தனர்.

பிள்ளையவர்களுக்கு, கர்ணம் வைத்திலிங்கம் பிள்ளை, நமசிவாயபிள்ளை, அண்ணுசாமி ஐயர், சேஷையர் முதலியோர் முதன்மையான மாணவர் ஆயினர். பாரதப் பிரசங்கம் கண்ணுவையர்; இராமாயணப் பிரசங்கம் சபாபதி ஐயர், சாமிநாத வாத்தியார், கோபாலகிருஷ்ண பாரதியார், சாத்தனூர் பஞ்சுவையர், பெரிய ராமசர்மி ஐயர், சின்ன ராமசாமி ஐயர் முதலிய பல புலவர்கள் பிள்ளையவர்களிடம் வந்து சொல்லமுதம் பருகிச் செல்வதுண்டு.

உத்தியோகஸ்தர் அனைவருமே தமிழமுதை நாடிப் பிள்ளையவர்களிடம் வந்தனர். காரைக்கால் தனுகோடி முதலியார் புலவரிடம் மெய்யன்பு கொண்டார். கோபாலகிருஷ்ண பாரதியார் அடிக்கடி மன்றாடி, தமது நந்தனார் சரித்திர கீர்த்தனைக்கு, நமது புலவரிடம் ஒரு சாற்றுக்கவி வாங்கியே தீர்த்தார்.

"கோமேவு திருத்தில்லை நடராசப்
பெருமான்றாள் கூடி யுய்ந்த
பூமேவு பேரன்பர் திருநாளைப்
போவார்தம் புனிதச் சீரைப்
பாமேவு பலவகைய இசைப்பாட்டால்
இனிமையுறப் பாடியீந்தான்—
ஏமேவு கோபால கிருட்டினபா
ரதியென்னும் இசைவல்லோனே!"

ஒருநாள் புலவர் உறங்கி யெழுந்திருக்கும்போது, பாரதியார் தமது திண்ணையில் அமர்ந்து முணுமுணுத்துக்கொண்டிருந்த "கனகசபாபதி தரிசனம் ஒருநாள்" என்ற கீர்த்தனமே, அச்சாற்றுக் கவியைத் தூண்டியது! வேதநாயகம் பிள்ளை இக்காலம் அரிய கீர்த்தனங்கள் பாடி, இசைவாணரைக் கொண்டு பாடச் சொல்லிவந்தார். பிள்ளையவர்களும் அப்பாடல்களைக் கேட்டு மகிழ்ந்து புகழ்மாலை சூட்டிவந்தார். வேதநாயகம் பிள்ளையிடம் நமது புலவர்கோமானுக்கிருந்த அன்பு "குளத்தூர்க் கோவை" யென்னும் அரிய பாமாலையில் விளங்கும். பட்டீசுரம் நமச்சிவாயபிள்ளையும், பிறகு அவர் மகன் ஆறுமுகத்தா பிள்ளையும் நமது புலவர்மணியை அடிக்கடி வரவேற்று உபசரித்து வேண்டியதைக் குறிப்பறிந்து செய்தனுப்புவதுண்டு. ஆறு

முகத்தாபிள்ளை நமது புலவரைத் தந்தையும் குருவு மாகக் கருதி வணங்கினர்.

## கo. ஆதீன வித்துவான்

நமது புலவர் பெருமான் அடிக்கடி திருவாவடு துறைக்குச் சென்று, சந்நிதானத்தை வணங்கிப் பாமாலை சூட்டி வந்தார். வேளூர் சுப்பிரமணியத் தம்பிரானுக்குப் பிறகு, அம்பலவாண தேசிகர் மகா சந்நிதானமாக விளங்கினர். தேசிகர், தமிழும் வட மொழியும் தேர்ந்த அரிய நூலாராய்ச்சியாளர்; ஆனல், உலகானுபவமும், பிறரை வசப்படுத்திக் கொள்ளும் தன்மையும் குறைவு. அவரிடம் தக்க முறையில் பாடங்கேட்க நமது பெரும்புலவர் காத்தி ருந்தார். அம்பலவாணர் முதலில் புலவரை மதிக்க வில்லை. பிறகு, "என்ன படித்திருக்கிறீர்? ஆதீன மாணவருக்கே பாடம் சொல்லுவோம்; வணக்க வொடுக்கமாகக் கேட்கவேண்டும்" என்றெல்லாம் கேள்விபோட்டு, முடிவில் கம்பரந்தாதியைப் பாடஞ் சொன்னர். மாணவரின் அறிவாற்றலைத் தெரிந்து கொண்டபோதிலும், "சாது, அப்பாவி" என்றே நினைத்தார் தேசிகர். ஆனல், நாளடைவில் அவரும் நமது புலவர் பெருமானை அறிந்து போற்றத் திரு வருள் ஓர் அரிய துணையைக் கொண்டுவந்தது.

இச்சயமே மேலகரம் சுப்பிரமணியதேசிகர் சின்னப் பட்டத்திலிருந்து ஆதீனத்தை நிர்வகித்தார். அவர் நமது புலவரிடம் பெருமதிப்பும் பேரன்பும் பூண்டவர். புலவரின் கல்வியறிவை நன்கறிந்து போற்றியவர். அவர் ஒருநாள் அம்பலவாண தேசி

கரிடம் மன்ருடி, "எப்படியாவது நமது புலவரை ஆதீனவித்துவாளுக்கிவிட வேண்டும்; அது மடத்திற்கே பெருமை; அவரது மாணவர்களையும் ஆதரிக்க வேண்டும்" என்ருர். பல கேள்விகள் கேட்டுச் சந்தேகந்தெளிந்து அம்பலவாணர் அதற்கிசைந்து, தமது திருமடத்திற்கெதிரேயே ஒரு பெரிய வீட்டை யளித்துப் புலவருக்கு மாதச் சம்பளமும் நெல்லும் தந்து பாடஞ் சொல்லச் செய்தார். மாணவர்களுக் கெல்லாம் மடத்தில் சாப்பாடு நடந்தது. இனிக் கவலையில்லை. 'பாடுவது, பாடஞ் சொல்லுவது' இரண்டுதான் நமது புலவருக்கு வாழ்வின் பயனும் மகிழ்வுமாயின. அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. ஆதீனமும் அவ்வாறே. இப்புலவர் பெருமான் இருக்கையே, ஆதீனத்திற்குத் தனிப் புகழ் அளித்தது. எந்தப் பெரிய செல்வர், புலவர் வந்தாலும், சந்நிதானத்தைத் தரிசித்து, உடனே நமது புலவர்பெருமானைக் கண்டுபேசி மரியாதை செய்யவே வருவது வழக்கம்; அதனுல் அவருக்குத் தமிழகத்திலுள்ள பல கவிகள், இசைவாணர், மொழிப்புலவர், செல்வர், ஜமீந்தார்கள் முதலிய அனைவர் பழக்கமும் ஏற்பட்டது; அவர் பெயருக்கும் நல்ல செல்வாக்கு ஏற்பட்டது. பிள்ளையவர்கள் தமது நன்றியை விளக்கி, ஆதீனத் தலைவராகிய அம்பலவாண தேசிகர் மீது ஓர் அரிய கலம்பகம் பாடினுர். அது, பல புலவர் முன் அரங்கேற்றப்பெற்றது. புலவரும் தம்பிரான்களும், மகாசந்நிதானமும், மற்ருேரும் பிள்ளையவர்கள் வாக்கைப் பருகி இன்புற்றுப் போற்றினர். அம்பலவாணதேசிகருக்கு ஆதீன வித்துவானிடம் பெருமகிழ்ச்சியுண்டானது. சுப்பிர

மணிய தேசிகரும் நமது புலவருக்குச் சரியான பட்டம் கொடுத்து மரியாதை செய்ய வேண்டு மென்றார்.

## கக. "மகா வித்துவான்"

பெரும் புலவர் மணிகள் கூடிய ஒரு சபையில் அம்பலவாண தேசிகர் நமது புலவருக்கு "மகாவித்துவான்" (பெரும் புலவர்) என்ற பட்டமளித்துச் சால்வை போர்த்திக் கௌரவித்தார். அது ஆதீனத்திற்கே பெரும்புகழானது. ஆதீனத்திற்கு வரும் புலவர்கள் அனைவரும் மகாவித்துவானிடம் அளவளாவி, அவரது வாக்கமுதை உண்டு உளம்பூரித்தனர். நமது புலவரும் தக்கபுலவருடன் பேசிப்பழகி, அவர்கள் சொல்லும் வடமொழி தென்மொழிப் பாடல்களைச் சுவைத்து வந்தார். வடமொழி சுலோகங்களை நிரம்பக்கேட்டு, அவற்றைத் தமது நூல்களிற் சேர்த்தும் பயன் பெற்றார் புலவர். இசைப்புலவர்களிடம் இவருக்குப் பெருமதிப்புண்டு. அக்கால இசையுலகை ஆண்ட புலவர், மகாவைத்தியநாதையர்; அவர் அண்ணல் இராமசாமி சிவமும் இசை வல்லவர், அரிய கவி. இருவரும் தமிழில் தேர்ச்சி பெற்றவர்கள்; மகா வைத்திநாதர், பிள்ளையவர்களின் பாடல்களை இன்னிசையுடன் பாடினார்; தாம் செய்யும் சிவகதைகளில் எடுத்தாண்டு வந்தார். பிள்ளையவர்களின் புராணகாலட்சேபம் எங்கே நடந்தாலும், இருவரும் சென்று கேட்டுப் பயன் பெறுவதுண்டு. அண்ணல் இராமசாமி சிவம் இயற்றிய பெரியபுராணக் கீர்த்தனங்களைத் தம்பி அரங்கேற்றித் தமிழகமெங்கும் பரப்பினர். நமது புலவர் அக்

கீர்த்தனங்களை அடிக்கடி கேட்டு இன்புற்ருர். இக்காலம் இவர் இயற்றிய நூல்களும் தனிப்பாடல்களும் மிகப்பலவாம். ஆனால், நமக்குக் கிடைத்திருப்பது மிகச்சிலவே. இவர் எதைப்பாடினாலும் மற்றப் புலவர்களும் தமிழன்பர்களும் மாணவர்களும் எழுதிக்கொண்டு பாடம்செய்து, பாடிப்பாடி மகிழ்ந்தனர். வித்துவான்களெல்லாரும் தமது காவியங்களுக்குச் சாற்றுக்கவி வாங்க வந்தார்கள். மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சாற்றுக்கவி பெற்ற நூலுக்குத் தனிப்பெருமையிருந்தது.

அக்காலம் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் சிறந்த தமிழ்ப்பணியும் சைவத்தொண்டும் செய்துவந்தார். அவரது வசனநடையும், நமது புலவரின் செய்யுளும் தமிழகத்திற் புகழ்பெற்றவை. ஆறுமுக நாவலர் இராமநாதபுரத்திற்கு வந்து, தமிழ்வளர்த்த பாண்டித் துரைத் தேவரின் அன்பைப்பெற்றுப் பல பழம்பெரு நூல்களைப் பதிப்பிக்க மேற்கொண்டார். அவற்றுள் திருக்கோவையார் ஒன்று ; அதற்கு அவர் சாற்றுக்கவி பெற திருவாவடுதுறைக்கு வந்து, மீனாட்சி சுந்தரப் புலவரைப் பார்த்தார். இரண்டு புலவர்களும் அன்புடன் அளவளாவினர். நமது புலவர் அழகான நீண்ட சாற்றுக்கவி தந்து, ஆறுமுக நாவலரைப் போற்றினர். அதைத்தொடர்ந்து இன்னும் பல நூல்களுக்கு இவர் சாற்றுக்கவியளித்தார். நாவலருக்கும் மகாவித்துவானுக்கும் உள்ளொன்றிய நட்புரிமையிருந்தது. இருவரும் அடிக்கடி சந்தித்தனர்.

இக்காலம் இவரிடம் பயின்ற புலவர் பலர். அவருள் நமச்சிவாயத் தம்பிரான், தேவகோட்டை

நாராயணஞ் செட்டியார், மதுரை இராமசாமிப் பிள்ளை, சாமிநாத தேசிகர், தியாகராசசெட்டியார் முதலியோராவர். இவர்கள் அனைவரும் புகழ்பெற்ற னர். சாமிநாத தேசிகர், கும்பகோணம் கல்லூரியில் தமிழ்ப்புலமை நடாத்தினர். அக்காலம் கல்லூரித் தலைவராயிருந்தவர், தண்டலம் கோபாலராவ் தமி ழன்பர். அவர் நமது மகாவித்துவானை அடிக்கடி அழைத்துப்பேசி மகிழ்வதுண்டு. ஒரு சமயம் திருவி தாங்கூர் கல்லூரிக்குத் தமிழ்ப்புலவர் வேண்டுமென்று கோபாலராவுக்குக் கடிதம் கிடைத்தது. அவர் நமது புலவரைக் கேட்டார். "சமஸ்தான வித்துவானுகி, செல்வாக்குடனிருக்கலாம்" என்ருர். இங்கேயே காவிரியாடி, சிவதரிசனம் செய்து மாணவருக்குப் பாடம் சொல்லிக்கொண்டு அமைதியாயிருக்கவே புலவர் விரும்பினர்; சாமிநாத தேசிகரைச் சிபார்சு செய்தார். தேசிகர் திருவிதாங்கூர் சென்ருர். பிள்ளை யவர்களின் சிபார்சின்பேரில் தியாகராச செட்டியார் கும்பகோணம் கல்லூரியில் தமிழ்ப்புலவரானர் (3—7—1865).

இவ்வாறு தமிழுலகம் இவரை நன்குமதித்தது. இவர் புகட்டிய தமிழ், நாடெங்கும் தமிழ்ப்பயிரை வளர்த்தது.

## இயற்றிய நூல்கள் :

இக்காலம் இவர் இயற்றிய அரிய நூல்களாவன: முருகன் பிள்ளைத் தமிழ், திருவிடைக்கழிக் குறவஞ்சி, ஆற்றூர்ப் புராணம், விளத்தொட்டிப் புராணம், வாளொளிப்புற்றூர்ப் புராணம், அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழ், திருக்குறுக்கைப் புராணம், திரு

ஞான சம்பந்தர் பதிற்றுப்பத்தந்தாதி, குருபரம்பரை அகவல், மண்ணிப் படிக்கரைப் புராணம், கோயிலூர்ப் புராணம், கும்பகோணம் புராணம், குடந்தைத் திரிபந்தாதி, சூறைமாநகர்ப் புராணம், கண்டதேவிப் புராணம், திருத்துருத்திப் புராணம், திருவாவடுதுறை யமக அந்தாதி, தனியூர்ப் புராணம், மாயூரப்புராணம், காசி ரகசியம், வீரவனப் புராணம், கன்னபுரம் பாகம்பரியாள் பிள்ளைத்தமிழ், பிரம்மவித்தியாநாயகி பிள்ளைத்தமிழ், திருநாகைக் காரோணப் புராணம், திருவிடைமருதூர் உலா, குமரகுருபரசுவாமிகள் சரித்திரம், பட்டீச்சுர புராணம், சிவஞானயோகிகள் சரித்திரம், பூவாளூர் பதிற்றுப்பத்தந்தாதி, தில்லை யமக அந்தாதி, குளத்தூர்க்கோவை, சுப்பிரமணிய தேசிகர் நெஞ்சுவிடு தூது—முதலியன; இன்னும் எத்தனையோ தனிப்பாடல்களும் பிரபந்தங்களும் செய்தார் இப்பேரிசைப் புலவர்மணி. அனைத்தையும் வைத்து காப்பாற்றக்கூட நமக்கு தெரியவில்லை.

## கஉ. இடர்கள்

மீனாட்சிசுந்தரனார் தமிழும் சிவமுமாக வாழ்ந்த திருத்தொண்டர். அவர் எவரையும் புண்படப் பேசார். பிறர் துன்புறுத்திச் சிறுமை செய்தாலும் பொறுத்திருப்பார். பரமசாது என்று அவரை எல்லாரும் அறிவார்கள். ஆனால் உலகம் இப்படிப்பட்ட சாதுக்களைச் சும்மா விடுமா? போற்றினோர், சில புலவர்கள்; தூற்றினோர், பல கலகர்கள். பஞ்ச பாண்டவரை வருத்த நூறு கௌரவர்கள் கிளம்பும் உலகன்றோ இது! நமது பிள்ளையவர்களும் இங்கே

இடர்ப்பட்டார். முதலில் வறுமை யிடர்: தமிழுக்கே வாழ்ந்த இப்பெரியார் தம்மைப்பற்றிப்பேசார்: பிறர் குற்றமும் கூறார். இவர் புகழ் ஓங்குவது சிலருக்கு நீங்காப் பொறாமைநோயை அளித்தது. இவர் திருச்சியில் ஒரு செல்வர் வீட்டில் பெரியபுராணம் படித்தார். பொறாமைக்காரர், "ஐயா, பெரியபுராணம் அபசகுன புராணம்; ஒவ்வொரு கதையின் முடிவும் சாவுதான்; அதை வீடுகளிற் படித்தலே பிசகு" என்று கலைத்தனர். தொடைநடுங்கிப் பிரபு, புராணத்திற்கு விடை கொடுத்துவிட்டார், இன்னொரு வீட்டில் அது தொடங்கியது. அங்கும் பகைவர் சென்று மித்ரபேதம் செய்தனர். மாணவருக்குள்ளேயே இரண்டோர் ஆஷாடபூதிகள், ஆசிரியரைப்பற்றிப் புறம்பேசினர். சீர்காழிக் கோவை அரங்கேற்றும்போது, இவரை ஒரு மாணவரே கண்டகேள்வியெல்லாம் கேட்டு இடர் செய்தார். பொறாமைப் பிண்டங்கள் கழுகுபோலக் காத்திருந்து, இவர் புராணங்கள் படிக்கும்போது, குறும்பு செய்வதுண்டு. மற்றொரு புலவர், "நீங்கள் மட்டும் இவ்வளவு பாடல்களைச் செய்கிறீர்களே; எனக்கும் பங்கு தரவேண்டும்" என்று நச்சினர். நல்லவேளையாக ஒரு நண்பர், "உமக்கு இப்படிப் பாடுந்திறமை கிடையாது" என்று விளக்கி வாயடக்கினர்.

இவர் புராணம் அரங்கேற்றும்போது, "நான் வருமுன்பே படித்தார்" என்று சிலர் முனிவதுண்டு; "நான் இருக்கையில் தொடங்காமல், இன்னொருவருக்காகக் காத்திருந்ததேன்?" என்று சிலர் பிணங்கி முகத்தைச் சுளிப்பதுண்டு. "ஏனையா தொண்டைத்

தண்ணீர்வற்ற இப்படிப் பாடம் சொல்லுகிறீர்? இந்த மாணவரால் உமக்கென்னபயன்?" என்றும் சிலர் குறுக்கே விழுந்தனர். சிலர் மாணவர்களைக் கலைத்தனர்: "இவருடன் இருந்தால் பயனென்ன? ஏதோ சில நூல்கள் கேட்டமட்டிலும் சரி, போய்ப் பிழைக்க வழிபாருங்கள்" என்றனர். அப்படி வெளியேறிய மாணவர் பலர். புலவர் தமது மாண வர் உண்டி உறையுளுக்காகவே கடன் வாங்கிச் செலவிடுவதுண்டு. இவர் ஓரிடத்திற் கடன் கேட் டால், "இவருக்கு எதை நம்பிக் கடன் தருவது?" என்று குறுக்கே நின்று சிலர் காரியத்தைக் கெடுப் பர். இறுதிமட்டும் நமது புலவர் வறுமையிலேதான் உழன்றார். குடும்பம் கடனிலே தத்தளித்தது. தல புராணங்கள்பாடி அரங்கேற்றினால், ஒரு சிறுதொகை வரும். அதை அப்படியே செலவிட்டு விடுவார் புலவர். இவர் கை தாராளமானது; பணம் தங்காது. சேர்த்துப்பூட்ட ஒருபோதும் இவர் நினைத்ததேயில்லை. இவர் காலத்திற்குப் பிறகும் குடும்பம் வறுமையிலே தான் தத்தளித்துக்கொண்டிருந்தது. இவருக்கு ஒரே மகன், சிதம்பரம் என்பான். அவனுடைய கலி யாணத்திற்கு மகா சந்நிதானம் ஆயிரம் ரூபாயும், மாணவரும் செல்வரும் கொஞ்சம் தொகையும் அளித்தனர். ஒரு பைசா மிச்சம் வைக்காமல் செல விட்டுவிட்டு, மறுபடியும் செலவிற்காகத் தலபுராணங் கள் பாடி அரங்கேற்றினார், புலவர். ஆனால் இவர் பணத்தை மதித்ததில்லை; பணக்காரர் வாலைப்பிடித்த தில்லை. செல்வச்செருக்கரை இவர் அணுகார்; எளியவர் நட்பையே விரும்புவார். கல்விமான்கள் கூட்டத்திலேதான் இவர் இருப்பது வழக்கம். திருத்

தலங்கள், தமிழறிஞர் கூட்டம், பதிப்பாடல்கள், கவிமாலை, மாணவருக்குப் பாடஞ்சொல்லல்— இவையே இவருக்குப் பிரியமானவை.

1869-ஆம் ஆண்டு அம்பலவாண தேசிகர் மகா சமாதியடைந்தார். ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் பட்டம் பெற்றார். தேசிகர் நமது புலவரைக் கண்போலக் காத்தார். தாம் யாத்திரை செல்லும்போது உட னழைத்துச் சென்றார். அதனால் இவர் பல தலங் களையும், பழைய நண்பரையும் மாணவரையும் பேசிப் பழக முடிந்தது. இவரிடம் வைத்த அன்பினாலேயே பலர் ஆதீனத்திற்கும் அன்பராகித் தேசிகரைத் தரிசித்து வணங்கினர். இவர் செய்துதந்த பாடல் களைத் தம்மதுபோல் சந்நிதானத்தின் முன் பாடிப் பரிசில் பெற்று வறுமைதீர்ந்தவர் கணக்கிலர்; ஏழைகளுக்கு இவர் பாடல்கள் இயற்றித்தந்து செல்வரிடம் பரிசில் பெற்றுக்கொள்ளச் செய்வ துண்டு. சந்திரனைப்போலத் தமது வறுமையைப் பாராட்டாமல், பிறர் வறுமைதீர இவர் செய்த உபகாரங்கள் பல.

இப்புலவர் பெருமைகள் அளவற்றன. அவை யெல்லாம் காலச் சூறாவளியில் மறைந்து போகாமல் காப்பாற்றி நமக்கு எழுதிவைத்துச்சென்ற பெரியார் டாக்டர் உ. வே. சாமிநாதையர் ஆவர். இனி, அவர் இப் புலவருக்கு மாணவராயமைந்த சிறப்பைச் சொல் வாம்:

## கந. சாமிநாதையர்

மகா சந்நிதானத்தின் உத்தரவு பெற்றுக்கொண்டு 1870-ஆம் ஆண்டு மகாவித்வான் மீனுட்சிசுந்தரனர் மாயூரத்தில் வசிக்கத்தொடங்கினர். அங்கிருந்த அரிய அன்பர்கள் இவருக்குவேண்டிய வசதிகளைச் செய்துகொடுத்தனர். தெற்கு வீதியில் திருவாவடு துறை மடத்திற்கு மேல்புறம் இருந்த ஒரு வீட்டை இவர் தொள்ளாயிரம் ரூபாய்க்கு வாங்கினர்; அதன் பின்புறம் ஒரு தோட்டம் அமைத்தார். தோட்டப் பயிர் வளர்த்தார். தோட்டத்தைச் சார்ந்த ஒரு குளமும் உண்டு. அங்கே ஒரு கட்டிடம் அமைத்து, அதிலிருந்தே புலவர் மாணவருக்குப் பாடஞ்சொல்லிவந்தார். பட்டீசுரம் ஆறுமுகம்பிள்ளை வீடமைக்க எல்லாத்தொண்டும் செய்தார். திருவா வடுதுறை ஆதீனத்திலிருந்து புலவர், உணவுச்சாமான் களும், ஒரு சமையற்காரனும் பெற்றுர். பாடஞ் சொல்லல், சிவபூஜை செய்தல் இரண்டிலேயே புலவரின் இறுதிநாட்கள் சென்றன. இவர் இல்லம், தமிழணங்கின் திருக்கொலுவாயிருந்தது; தமிழ் நாட்டுப் புலவர்களுக்கெல்லாம் அது தாயகமா யிருந்தது. அதில் கவிவாணியும் கலைவாணியும் நர்த் தனம் செய்தனர். அச்சிறு வீட்டிலிருந்து எத்த னையோ கல்விக்கதிர்கள் எழுந்து தமிழொளி பரப் பின. அவற்றுள் மிக்க ஒளிபெற்ற கதிர்மணி, நமது சாமிநாதையர்.

சாமிநாதையர் உத்தமதானபுரத்திற் பிறந்தவர். அவர் தந்தை இசைப்பயிற்சியும் தமிழ்ப்பயிற்சியும் மிக்கவர். சிறுவயதில் சாமிநாதையர் கனம் கிருஷ்

ணையர் போன்ற வித்துவான்களிடமும், தகப்பனாரிட மும் இசைப்பயிற்சி பெற்றார்; அரியலூர் சடகோ பையங்கார், செங்கணம் விருதாசலசெட்டியார் முதலிய புலவர்களிடம் தமிழ் பயின்றார்; அக்காலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் புகழ் எங்கும் பரவியிருந்தது. அந்தப்பெயரைக் கேட்டாலே சாமிநாதனுக்கு உள்ளம் சிலிர்த்தது. தகப்பனாரிடம் பிள்ளை தனது விருப்பத்தைத் தெரிவித்தான். 1871 ஏப்ரல் மாதம், தந்தை மகனை அழைத்து வந்து பிள்ளையவர்களிடம் ஒப்புவித்தார். பிள்ளையவர்கள், இரண்டு செய்யுள் சொல்லச்சொல்லிச் சோதித்து ஐயரின் திறமையை அறிந்தார். பிறகு "இங்கே படிப்பதாகப் பலர் வந்து இரண்டொரு நூல்கள் கற்றதும் தந்திரமாகச்சென்று, தாம் எல்லாப் பாட மும் கேட்டதாக வெளியில் சொல்லித் திரிகிறார்கள். முடிவுமட்டும் நிலைப்பாயிருப்பதில்லை. இவர் தமிழை நிறைவாகக் கற்குமட்டும் இருந்தால் பயனுண்டு" என்றார். தந்தை வேங்கிடசுப்பையர், "எவ்வளவு காலம் வேண்டுமானாலும் இங்கே தங்களிடம் இருக் கட்டும்" என்று பையனை விட்டுச்சென்றார். அப் போது சாமிநாதையருக்கு வயது பதினேழு. அவர் ஓர் உணவுவிடுதியில் சாப்பிட்டுக்கொண்டு பிள்ளை யவர்களிடம் தமிழ்பயின்றார். அக்காலம் இவருடன் படித்தவர்கள் காரைக்கால் சாவேரி நாதர் என்னும் உள்ளன்பர், கனகசபை ஐயர், சிவப்பிரகாசையர், சேஷையர், கந்தசாமி பிள்ளை, முத்துசாமி, சாமிநாத பிள்ளை முதலியோராவார். முதலில் புலவரின் மாண வர் ஒருவர், ஐயருக்கு நைடதம் பாடம் சொன்னார். புலவரிடமே பாடம் கேட்கச் சாமிநாதையர்

உள்ளம் துடித்தது. புலவர் காலையில் தோட்டத்திற்கு வந்து, செடிகள் தளிர் விட்டதைக்கண்டு உள்ளந்தளிர்வார். சாமிநாதையர் தளிர்விட்ட செடிகளை முன்பே பார்த்துவைத்துக் காட்டிவந்தார். தளிர்கள்மூலம் புலவருடன் இவர்பேச வாய்ப்புக் கிடைத்து; ஒருநாள் தமது விருப்பத்தையும் தெரிவித்தார்.

நைடதம் முடிந்ததும் புலவர் தாமே சாமிநாதையருக்குப் பாடம் சொல்லத்தொடங்கினர். பெரும்பாலும் பிள்ளையவர்கள் இயற்றிய பிரபந்தங்களையே சாமிநாதையர் அவரிடம் முதலிற் கற்றூர். திரிபந்தாதிகள், பிள்ளைத்தமிழ்கள், பிரபந்தங்கள் இவை நன்ருக நடந்தன. பழம்புலவர் வரலாறுகளையும் கவிநயத்தையும்பற்றி ஆசிரியர் அடிக்கடி சொல்லுவார். அதனுல் பல தனிக்கவிகள் மாணவருக்கும் பாடமாகும். இக்காலம் எழுத்தாணி பிடிக்கவே தெரியாதிருக்கிருேம்; ஓலையெழுத்துப் படிக்கவும் தடவல்தான்! எட்டிலெழுதிப் படித்த அக்கால மாணவரின் தமிழ்ப்புலமை அற்புதமாயிருந்தது. சிறிய நூல்களையெல்லாம் ஓதியபிறகு, ஆசிரியர் மாணவருக்குப் பெரியபுராணம் பாடஞ்சொன்னுர். பிறகு சாமிநாதர், கம்பராமாயணம் முதலிய பல நூல்களைப் பாடங்கேட்டார். பெரும்பாலும் பிள்ளையவர்கள் பாடும் ஆசுகவிகளைச் சாமிநாதையர் ஓலையில் எழுதிப் பழகியே சிறந்த மொழிப் புலமைபெற்றூர். புலவர் இவரிடம் உயிராயிருந்தார்; இவர் தேவைகளை முகமறிந்து உதவினுர்; இவர் உணவு உடை இருக்கைச் சௌகரியங்களைக் கருத்துடன் கவனித்தார்; வெளியூர்களுக்கும் உடனழைத்துச் சென்ருர்; தம்மைப்

பார்க்கவரும் புலவருக்கெல்லாம் அறிமுகப்படுத்தி, இவரது கல்வித்திறமையை விளக்கினுர். சிலமாதங்கள் கழித்து, ஆசிரியர் திருவாவடுதுறைக்கே போய்ப் பாடஞ்சொன்னுர். சாமிநாதையரும் அங்கேயே சென்று சந்நிதானத்தின் ஆதரவைப்பெற்ருர்.

ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் சாமிநாதையர் பெற்ருேர்களேயும் வரவழைத்து, மனேயும் உணவு வசதிகளுந்தந்து ஆதரித்தார். அவர் செய்த அந்தப் புண்ணியமே இன்று சங்கத்தமிழைக் காத்தது. சுப்பிரமணிய-தேசிகர் அன்பர்களேக்காண சஞ்சாரம் செய்யும்போது, புலவர், சாமிநாதையர்—ஆகிய இருவரும் உடன்சென்று வருவதுண்டு. ஆங்காங்கே புலவர் தரிசனத்திற்கு வந்தால், இவர்களேக்கொண்டு கவிகள் சொல்லச்செய்வதுண்டு. ஒருசமயம் பிள்ளேயவர்கள் திருப்பெருந்துறைப் புராணம் பாடி அரங்கேற்ற திருப்பெருந்துறைக்கே சென்ருர்கள். சாமிநாதரும் உடன் சென்ருர். புலவர் சொல்லும் கவிகளே இவரே எழுதிவந்தார்; செப்பேடும் படித்தார். இடையே இவருக்குக் காய்ச்சல் வந்தது. புலவர் மிக்க வருந்தித் தக்க துணேயுடன் மாணவரை ஊருக்கனுப்பினுர். பெருந்துறையில் பல புலவர்கள் வந்து நமது புலவர் பெருமானேத் தரிசித்துப் பேசிமகிழ்ந்தனர். புராணங் கேட்க இராமநாதபுரம், சிவகங்கை, புதுக்கோட்டைச் சீமையிலுள்ள செல்வர்களும் புலவர்களும் வந்திருந்தனர். சிவகங்கையிலிருந்து சென்றவருள் முதன்மையானவர்கள், தெய்வசிகாமணிப் புலவரும், சிலேடைப் புலி பிச்சுவையருமாவர். இருவரிடமும் நான் நன்ருகப் பழகியதுண்டு. இவர்களும் இன்னும் சிலரும் மீனுட்சிசுந்தரம் பிள்ளேயைப்பற்றி வாஞேங்

கப் புகழ்ந்து கொண்டாடக் கேட்டிருக்கிறேன். திருப்பெருந்துறைப் புராணம் முடிந்தபிறகு, நமது புலவரைப் பலவூர்ச் செல்வர் அழைத்து உபசரித்தனர். புலவர் தேவகோட்டை, குன்றக்குடி, புதுக்கோட்டை முதலிய இடங்களில் உபசரிக்கப்பெற்று, பல பாடல்களும் பாடினர். புதுக்கோட்டையில், புலவர் இருந்தபோது சிவகங்கை வாசிகள் பலர் அவரைச்சென்று கண்டனர். அவ்வூர் பெரியசாமித் தேவர், புலவரைப் பார்த்ததுண்டு: “கம்பீரமான ஆள், வாயெல்லாந் தமிழ்மணக்கும் புலவர்; கவிக் காளமேகம். மேகங்கூடப் பருவகாலத்திலேதான் பொழியும்; இவர் வற்ரு நீர்வீழ்ச்சிபோலக் கவி பொழிகிருர். எழுத்தாணி பிடித்து எழுதிக்கொண்டே போகலாம்; சொல்லிக்கொண்டே போவார். ஒவ்வொரு கவியும் ஆழ்ந்த கருத்துடையது; யாப்பமைதியுடன் பழைய புலவர் வாக்குகளைப்போன்றது. சேக்கிழாரும் கச்சியப்பரும் குமரகுருபரரும் அவர் வாக்கில் தவழ்கின்றனர்” என்று புலவர்கள் இவரைப்பற்றிப் புகழ நான் பன்முறை கேட்டிருக்கிறேன். பல ஊர்களில் புகழ் சுமந்து நமது புலவர் பட்டீச்சுரம் வந்து, பிறகு திருவாவடுதுறை சேர்ந்தார். அங்கே சாமிநாதையர் மீண்டும் பாடம் படித்தார்; தாம் பயில்வதுடன் அவர் பிறருக்கும் பாடஞ் சொல்லி வந்தார். தியாகராச செட்டியார்கூடச் சாமிநாதையர் படிப்பை மெச்சினர். சுமார் ஐந்தாண்டுகளே இவ்வுறவு நிலைத்தது.

## கச. இறுதி நாள்

அறுபதாண்டாயிற்று. ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரே அறுபதாண்டு விழா நடத்திப் புலவரைச் சிறப்பித்தார். ஓயாது பாடஞ் சொன்னமையாலும், பல இடர்களைப் பொறுத்தமையாலும், உடலைச் சரியாகப் பேணுமையாலும் புலவருக்கு முதுமைக்குரிய தளர்ச்சியுண்டாயிற்று. வயிற்றிலும் காலிலும் வீக்கங்கண்டது. தோள்கள் மெலிந்தன; சோறு வேண்டியிருக்கவில்லை; பித்தம் வாயு இரண்டும் வருத்தின. நோயுடனும் புலவர் மாணவருக்குப் பிரியமாகச் சில காலம் பாடஞ்சொல்லி வந்தார். நல்ல கவிதைகளைப் படிக்கக்கேட்டால் அவருக்கு நோயின் வருத்தங் கூடத் தணிவதுண்டு. தேசிகர், திருவிடைமருதூரில், தமது கட்டளை மடத்தில்வைத்துத் தக்க வைத்தியரைக் கொண்டு பரிகாரம் செய்தார். நோய் அதிகரித்தது. இரவில் தூக்கமில்லை. தமிழ்ப்பாடல்களைப் பாடச் சொல்லிக் கேட்டுக்கொண்டே சிவ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பெரியபுராணம், திருவாசகம், முத்துத்தாண்டவர் பதங்கள், அருணசலக்கவிராயர் கீர்த்தனைகள்—இவை அவர் பிரியமாகக்கேட்ட பாடல்கள். இவரது உடல்நலத்திற்காக அன்பர், மஹாலிங்க மூர்த்திக்கு அபிஷேகமும் ஜபமும் செய்வித்தனர். ஜபம் காலனிடம் பலிக்கவில்லை. புலவரைத் திருவாவடுதுறைக்கே கொண்டுவந்து, மாணவர் கட்டிக்காத்துப் பணிசெய்தனர்; பேச்சும் தளர்ந்தது; உடல் வசப்படவில்லை; வாய் வணங்கவில்லை; சாடைதான். பதிநூல்களைப் படிக்கச்

சொல்லிக் கண்ணை மூடிக்கொண்டு, நடராஜாவின் குஞ்சிதபாதத்தையே நினைத்திருந்தார் புலவர். பிரபல மாணவர்கள் கண்ணீர் ஆறுய்ப்பெருக, அருகே திகைத்து நின்றனர். சாமிநாதையரும், அன்பர் சாவேரிநாதரும் அருகே யிருந்தனர். அச் சமயம் கோமுத்தீசர் காளைவாகனத்தில் புறப்பட்டு எழுந் தருளி, தெருவில் வந்தார். சாமிநாதையர் தேங்காய் பழம் நிவேதித்து, விபூதிப்பிரசாதமும் கொண்டு வந்தார்; புலவரிடம் பிரசாதம் தந்தார். நடராஜரை எண்ணி அன்புப்புலவர் திருநீறு இட்டுக்கொண்டு, அப்படியே கண்ணை மூடினர். பிறகு "திரு-வா" என்றார். சாமிநாதையர் உடனே, திருவாசகம், அடைக் கலப்பத்தைப் படித்தார் :

"வழங்குகின் றாய்க்குன் அருளார் அமுதத்தை
வாரிக் கொண்டு
விழுங்கு கின்றேன், விக்கினேன், வினையேனென்
விதியின்மையால்.
தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந்
துய்யக் கொள்ளாய்—
அழுங்குகின்றேன் உடையாய் அடி
யேன் உன் அடைக்கலமே"—

என்று பாடிக் கொண்டிருக்கும் போதே புலவர் உடலில் ஓர் அசைவுண்டானது. நடராஜா குஞ்சிதபாதத்தையே நினைந்து, அடைக்கலம் புகுந்தது ஆவி. போன மூச்சு வருமென்று சிறிது தாமதித்தனர். அன்பர்...உடலே மிச்சம். உயிர் உடையானிடம் சென்றடைந்தது. சாமிநா தையர் சாவேரிநாதர், மனைவி, மகன், அன்பர் அனை

வரும் கண்ணருவிபாய்ச்சினர். சுப்பிரமணியதேசிகர் செய்திகேட்டுப் பெருந்துயருற்றார். தமது திரு மடத்திற்கு நல்லொளியாயிருந்த புலவரின் அரிய அறிவாற்றல்களையும் குணாதிசயங்களையும் சொல்லிச் சொல்லி நைந்துருகினார். செய்தி காட்டுத்தீபோலப் பரவியது. புலவர்களும், செல்வர்களும், அன்பர் களும் வந்து குழுமினர் ; நூற்றுக்கணக்கான மாண வருக்குப் பாடஞ்சொல்லி, பதினாயிரக்கணக்கான செய்யுட்களைப்பாடித் தமிழ்ப்பணிபுரிந்த புலவர் பிரானை எண்ணியெண்ணி உருகினர். திருமேனியைக் குளிப்பாட்டி, விபூதி ருத்திராக்ஷம் தரித்து, பட்டு டுத்தி, மலர்களால் அலங்கரித்தனர். அதிர்வெடிகள் அதிர்ந்தன ; திருவாசகமும் தேவாரமும் முழங்கின. தம்பிரான்கள் வரிசையாக நின்று புலவருக்கு மரி யாதைசெய்தனர். வட-தென்மொழிப் புலவர், "கல்விக் கடலே, தமிழ்க் கடலே, தமிழ்க் காளிதாசா, கவிச்சக்கரவர்த்தியே !" என்று அலறினர். மாண வர், "ஐயோ, இனி யார் எங்களுக்கு இப்படிப் பாடம் சொல்லப்போகிறார்கள்?" என்று கண்ணீர் வடித்தனர். அலறியென்ன ? உடல் மயான யாத்திரை சென்று, காவிரிக் கரையில் சந்தனக் கட்டைகளால் எரிக்கப்பெற்றுச் சாம்பலானது.

கடிதங்கள் பறந்தன. தமிழ்நாட்டுப் புலவர்கள் அனைவரும் அன்று தீப்பட்ட மெழுகு போல மனம் உருகி வருந்தினார்கள். மகன் சிதம்பரம் பிள்ளைக்குக் கடிதங்கள் வந்து குவிந்தன : "பிள்ளையவர்கள் செய்த தமிழ்ப்பணி, கடலினும் பெரிது. அவர்களால் திருமடமே பெருமையுற்றது ; அவர்கள் பெற்ற சன் மானம் மிகச்சிறிது. மழை மேகம்போலக் கைம்

மாறு கருதாது தமிழ்வளஞ் சுரந்தார், மகாவித்து வான்" என்றார் தேசிகர்.

"சகிக்கமுடியாத் துன்பமெய்தி, பிறகு யாக்கை நிலையாமையைக் கருதி ஒருவாறு தெளிந்தேன். உலகமழியுங்காறும், தமது புகழுடம்பை நிலை யிறுத்திச் சென்றார்" என்றார் ஆறுமுகநாவலர். தியாகராச செட்டியாருடைய தாயார், முதல்நாளே இறந்தாள். "முதல்நாள் பெற்ற தாயையும், மறுநாள் ஞானத் தந்தையையும் இழந்தேன்" என்றார் செட்டி யார். மகா வைத்திநாதையரும், இராமசாமி சிவ மும் மிக்கவருந்தி, சரமகவி பாடினர். சாமிநா தையரை, ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் தேற்றிப் போற்றித் தம்முடன் வைத்து ஆதரித்தார்.

## கரு. குடும்ப நிலை

புலவர் உடல், மண்ணிற் கலந்தது. அவர் தமிழுக்கே வாழ்ந்தார். அவர் பொன்னைத் தேடவில்லை; புக ழைத் தேடவில்லை. புகழ் அவரைத் தேடி வந்தது. பொன்னும் இடையிடையே ஏதோ வந்தது. ஆனால் அனைத்தையும் மாணவர் பாதுகாப்பிற்கே அவர் செல விட்டார். அவர் வைத்துச் சென்றது, மூவாயிரம் ரூபாய் கடனே. ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் சிதம்பரம் பிள்ளைக்கு ஆறுதல் சொல்லிக் குடும்பக்கடனை முற் றிலும் தாமே கொடுத்துத் தீர்த்து, கொஞ்சம் பொரு ளும் தந்துதவினர்; அதற்குப் பதிலாகப் புலவர் ஏடு களை யெல்லாம் வாங்கித் திருமடத்தில் வைத்தார். மூன்று பெரிய பெட்டி நிரம்ப அந்த ஏடுகள் இருந் தன. குடும்பம் வறுமையில் தத்தளித்தது. வேதநாய

கம்பிள்ளை கண்பார்த்தார். கப்பூர் என்னும் கிராமத்தில் சிதம்பரம்பிள்ளைக்குக் கணக்கு வேலை செய்துவைத்தார். மாயூரம் வீடும் கடன்காரர்களுக்குப் போய் விட்டது; வறுமைதான். பிள்ளையவர்களின் மாணவ சிகாமணியான சாமிநாதையர் அபிமானிகளிடம் கொஞ்சம் தொகை வசூலித்துக் கொடுத்தார். அதன் வட்டியுடன் கணக்குவேலையில் வரும் வருமானமும் சேர்த்து, ஏதோ வாய்க்கும் கைக்கும் சரியாயிருக்கும். சிதம்பரம் பிள்ளையின் மகன் வைத்திலிங்கம் பிள்ளையே இப்போது கப்பூர் கணக்குவேலை பார்க்கிறார். அவருக்கு ஒரு ஆண் குழந்தை. பெயர் மீனுட்சி சுந்தரம். பாட்டனுர் பெயரை இப்புதல்வரே தாங்கி நிற்கிறுர். அவர் தமிழ், இவர் நாவிலும் தவழ்க!

## கசு. புலவர் தந்த செல்வம்

நமது புலவர்பிரான் எத்தனையோ செய்யுட்களைத் திரளாக அள்ளிக் குவித்தார்; அத்துடன் அவற்றை அறிந்து உலகிற்குச் சொல்லவும் சில மாணவமணிகளைத் தந்தார். தியாகராச செட்டியார் புலவரிடம் பேரன்புகொண்ட தமிழ்மணி. அவர் பூவாளூரில் தோன்றி, வாணிகத் தொழில் செய்து, பிறகு திருச்சியில் நமது புலவரிடம் கற்றுக் கும்பகோணம் கல்லூரியில் ஐம்பது ரூபாய் சம்பளத்தில் கணக்காயராகி, அரிய தமிழ்ப்பணி செய்தார். அவர் தமது வேலையைச் சாமிநாதையரிடம் தந்து விலகினுர். சாமிநாதையரே மீனுட்சிசுந்தரனுரின் அருமை பெருமைகளை இன்று நமக்கு விளக்கினுர்; அவரே புலவரின் வரலாற்றை விரிவாக நமக்கு எழுதி யளித்தார்; புலவரின் பிரபந்தங்களைத் திரட்டி அச்சிட்டு

உபகரித்தார். சாமிநாதையர் கும்பகோணம் கல்லூரியில் கணக்காயரா யிருந்தபோதே, சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், பத்துப் பாட்டு முதலிய சங்க நூல்களை வெளியிட்டு உதவினர். அவர் புகழ் நாடெங்கும் பரவியது. அவர் சென்னை மாகாணக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியரா யிருந்த காலமெல்லாம் தமிழுக்கு அரிய பெரிய தொண்டு செய்து பல பழஞ்சுவடிகளுக்கு உயிர் கொடுத்தார். அவர் புண்ணியத்தாலேதான் இன்று நாம் சங்கத்தமிழை அறிகிறோம். உத்தமதானபுரம் ஈன்ற தமிழன்னைக்கே உத்தம தானமாகத்தந்த பெரும் பேராசிரியர் டாக்டர் சாமிநாதையரை நாம் என்றும் மறக்க முடியாது. அவர் நினைப்பிருக்கும் வரையில் அவருக்குத் தமிழ்ச் செல்வமளித்த அன்பாசிரியர் மீனுட்சிசுந்தரம்பிள்ளையையும் மறக்க முடியாது.

## கஎ. மணிவாசகம்

பத்தொன்பதாம் நூற்ருண்டை 'மீனுட்சிசுந்தரனர் காலம்' என்பது பொருந்தும். அக்காலப் புலவர்கள் அனைவரும் இவரையே நடுநாயகமாக மதித்தனர். அக்காலமே தமிழிசை அறிவும் கலையறிவும் உச்சநிலையிலிருந்தன. அக்காலத்தை அணிசெய்தவர், ஆறுமுக நாவலரும் மீனுட்சிசுந்தரப் பாவலருமாவர். இருவர் வாக்கும் தமிழைச் செழிக்கச் செய்தன. இவர்களைச் சுற்றியே இன்றும் தமிழகத்தில் அருட்சுவையும் கலைச்சுவையும் வளர்ந்தோங்குகின்றன. வேலாயுத முதலியார், சபாபதி முதலியார், வேதநாயகம் பிள்ளை, கோபாலகிருஷ்ண பாரதியார், வேம்பத்தூர் பிச்சுவையர் போன்ற புலவர்மணிகள்

இவர் காலத்தவரே யாவர். தமிழகத்திற் பிறந்து, தெலுங்கில் அரிய கீர்த்தனங்களைப் பாடிய தியாக ராஜரும் இவர் காலத்தவரே. இசையுலகின் வரம் பெற்ற குயில்களான மஹாவைத்தியநாதையரும் பெரியவைத்தா, சின்னவைத்தா, கனம் கிருஷ்ணையர் முதலியோரும் இக்காலத்தவரே. இளந்தமிழில் உரைநடையும், செய்யுளும், இசைப் பாட்டும், கூத்தும் எழுந்திலகிய நாட்கள் இப்புலவர் நாட்களே. அந்த நாட்களில் எழுந்த இலக்கியங்களே இந்நாட் புலவருக்கும் வழிகாட்டுகின்றன. அக்காலப் பாடல் களே இக்காலப் பாடல்களின் உயிர்நாடியாயிருக் கின்றன. அக்காலப் புலவருக்கு நன்றி செலுத் துவோம். அவருள் நமது நன்றிக்குரிய முதற் பாவலர், புலவர் பிரான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்.

மீனாட்சிசுந்தரனார் தமிழ், மாசற்ற புலவர் தமிழ். எதுகை மோனை தளை துறைகளெல்லாம் அவர் கவியில் பொருத்தமாக அமைந்திருக்கின்றன. ஒவ் வொரு வரியும் ஆழ்ந்த பொருளைக் கொண்டது. அவர் ஒப்புயர்வற்ற சொற்கொண்டல்; ஆதலால் அவர் கவிதைகளில் அரும்பதங்கள் பொதிந்திருக்கும். தகுந்த புலவர்களிடம் பாடம் கேட்டால் மீனாட்சி சுந்தரர் கவிகள் கேட்கக்கேட்க இனிக்கும். அவர் எத்தனையோ புராணங்களும், யமக அந்தாதிகளும், திரிபந்தாதிகளும், வெண்பா அந்தாதிகளும், மாலை களும், கோவைகளும், கலம்பகங்களும், பிள்ளைத் தமிழ்களும், குறவஞ்சிகளும், இசைப்பாடல்களும் பாடினார்; அவற்றுட் பல மறைந்தன. டாக்டர் சாமிநாதையர் புண்ணியத்தால் நமக்கு 5021 செய்யுட்கள் கிடைத்துள்ளன. இவர் நூல்களுக்கு

ஆராய்ச்சி செய்யப் புகுந்தால் இச்சிறு நூல்மிகப் பெருகும்; ஆதலால், நமது புலவர்மணியின் திருவாக்குகளிலிருந்து சில இன்னமுதக் கவிமணிகளை இங்கே தேர்ந்தளிக்கிறேன்; அவற்றைப் பதம் பார்த்த தமிழர், பிள்ளை அவர்களின் நூல்களை முறையாகக் கற்று இன்புறுவார்களாக!

## கஅ. மீனாட்சிசுந்தரனார் கவியமுதம்!

1. மானேர் நோக்கி ஒருபாகா,
 மறைவாய் முழக்க நிறை பழைசைக்
கோனே, பொதுவிற் குனிக்கும் அருட்
 கூத்தா, முக்கட் கொழுங்கரும்பே,
தேனே கனியே, அன்பருளந்
 தித்தித் திருக்குந் தெள்ளமுதே,
வானே பெறினும் யானின்ருள்
 வழுத்தும் அன்பின் மாண்பருளே!

— *திருப்பழசை [பட்டீசுரம்] பதிற்றுப் பத்தந்தாதி*

2. ஆலையிற் கழைகள் உடைந்துசா ரோடி
 அலர்தலை அரம்பையைச் சாய்த்துச்
சோலையிற் புகுந்து, கமுகினை மாய்த்துத்
 துன்னுசெந் நெல்வயற் பாய்ந்து,
வேலையிற் பெருகும் ஊறையம்மானே,
 வெய்யகூற் றுவனெனைத் தொடருங்
காலையிற் கடுகி மழவிடை மீதிற்
 கௌரியோ டெழுந்துவந் தருளே!

— *திருவூறைப் பதிற்றுப் பத்தந்தாதி*

3. நாளெலாம் ஓடிக் கற்பசுக் கறந்து,
நல்லவர் நகைக்குமா திரிந்தேன் ;
மீளவும் உழல்வேன் ; வல்வினை ஞான
மெல்வினை ஞானமும் இல்லேன் ;
பாளைவாய்க் கமுகின் பசுங்கழுத் தொடியப்
பருவரால் குதிகொளுங் கழனி
வாளுலாம் பொழில்சூழ் காமர்பூம் பதிவாழ்
மாணிக்க மேயெனக் கருளே !

— பூவாளூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி

4. மெய்யெலாம் உரோமஞ் சிலிர்ப்ப, என்புருக,
விழிகணீர் சொரிய அன் புருவாய்,
ஐயநின் புகழே பேசிடார், நாவா
யளக்கரின் மிதக்குநா வாயே,
தெய்வமங் கையர்கள் சுனைகுடைந் தேறித்
திரும்கப் பெறுவரம் வேண்டிக்
கைகளேந் துதல்போற் காந்தள்கண் மலருங்
கற்குடி மாமலைப் பரனே !

— திருக்கற்குடிமலை மாலை

5. வரையெலாம் இவர்ந்தும் நதியெலாம் படிந்தும்
வனமெலாம் அமர்ந்தும், வா ரிதிசூழ்
தரையெலாம் உழன்றும் ஆவதென், நின்னைச்
சரண்புகா மானிடர்க் கம்ம !
திரையெலாம் அலைக்குஞ் செயலறிந் துறுகற்
செறித்தெனச் செழுமணி பலவுங்
கரையெலாஞ் செறியப் பொலிதரும் வாவிக்
கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே !

6. உள்ளுநருக் குவகைக்கடல் விம்ம
உதிக்கும் உவாமதியே!
உழுவற் பேரன் புடையருள் இருளற
உதய மெழுஞ்சுடரே!
துள்ளு தயித்திய ராய கடற்கொரு
சுடுவட வைக்கனலே!
தொழுதகை வானே ராய பயிர்க்கருள்
தோன்ற எழும் புயலே!
புள்ளு மலர்ப்பொழில் இமயப் பிடிதரு
பொருவரு மழகளிறே
புண்ணிய நண்ணிய தண்ணிய ரண்ணிய
பொங்கமு தச்சுவையே!
அள்ளு முகத்த அயிற்கர ஆண்டகை
ஆடுக செங்கீரை
ஆய விடைக்கழி நேய முடைக்குக
னாடுக! செங்கீரை!

— திருவிடைக்கழி முருகர் பிள்ளைத் தமிழ்

7. மறையின்முடியும் எனதுள் அகமும்
மனமும் உருக நித்தமும்
மதுர மொழியின் இனிய துதிசெய்
மறுவில் அடியர் சித்தமும்
நிறையும் அழகு பொழியு முகமும்
அபய வரத அத்தமும்
நிகரில் பிறவும் இலக அமரு
நிலவு மமல உத்தமி
கறையில் சிமய இமய முதவு
புதல்வி தருக முத்தமே,
கரையில் வளமை யளவு மணவை
முதல்வி தருக முத்தமே!

8. பிதிருந் தரமற இன்பா லளவிப்
பிழிசுவை மதுவிரவிப்
பிறங்கிய புல்ல கண்ட நிறீஇச்சுவை
பெருங்கண் டுங்கூட்டி,
எதிரும் பொருளில் பலாக்கனி மாங்கனி
இவைவா ழைக்கனிமுன்
இவையு முழுக்கனி முந்திரி கைக்கனி
யிவ்விர தமுநாட்டி,
அதிருங் கடலமிர் தமுமு ளூறுத்தி
யவாங்குழல் வீணையிசை
அத்தனை யும்புக வைத்துச் சிவமண
மகலா தே கமழ
முதிரு மருட்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்
முழக்குக சிறுபறையே!

— திருவெண்ணீற்றுமை பிள்ளைத் தமிழ்

9. செந்தமிழுஞ் சந்தனமுந்
திசையெல்லாம் பரிமளிக்க
மந்தவளி யுமிழ்மலய
வரைக்குடுமி நின்றிழிந்து
கொந்தவிழு மலர்வீசிக்
குளிர்கெழுமுத் தெடுத்திறைத்து
முந்தவெழு புனற்பொருநை
முழுவளத்த தந்நாடு!

— சேக்கிழார் பிள்ளைத் தமிழ் (நாட்டுவளம்)

10. சாலெல்லாம் வெண்டரளம்,
தளையெலாஞ் செஞ்சாலி,
காலெல்லாங் கருங்குவளை,
காவெலாங் களிச்சாறு
பாலெல்லாங் கழைக்கரும்பு
பாங்கெலா மிகத்திருந்தி
நூலெலா நனிவிதந்து
நுவல் வளத்த தந்நாடு!

— குமரகுருபரஸ்வாமிகள் சரித்திரம் (கங்கைக் காட்சி)

11. இருகரை உடைத்துப் பொங்கி
இரைத்தெழு கங்கை யாறு,
தருவியல் கானக் கொன்றை
சாடுபு கொணருந் தோற்றம்,
ஒருவற்:வாங்கு மேவி
உடல்கழிப் பவர்தந் தோளின்
மருவணி சூட்டச் சேர்த்து
வைத்திடு காட்சி மானும்!

12. மோகமாம் அடவி திரிந்தரி வையர்தம்
முலைக்குவட் டிடைநட மாடித்
தாகமார் ஆசைத் தருக்குலந் தோறும்
தாவுமென் புன்மனக் குரங்கைப்
பாகமார் பத்தி நாண்கொடு கட்டிப்
பலிக்குநீ செல்கயான் கொடுத்தேன்;
ஏகநா யகனே தில்லையி லாடும்
இறைவனே யெம்பெரு மானே!

முற்றிற்று.

# அன்பு நிலய நூல்கள்

## யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

### இயற்றியவை

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| புதுக்கவி விட்மன் | 1 | 8 |
| மகாகவி ராஸீன் | 1 | 4 |
| மகாகவி தாந்தே | 1 | 8 |
| வரகவி தாம்ஸன் | 0 | 8 |
| ஞானி எமர்ஸன் | 0 | 6 |
| அன்பின் அற்புதம் (வாசேசரைப் பற்றிய அரிய நாடகம்) | 1 | 0 |
| ஸ்ரீ ராம தூதன் (கம்பன் கலை நாடகம்) | 1 | 4 |
| முல்லை மணம் (ஓரங்க இசை நாடகம்) | 0 | 4 |
| காலத் தேர் (காவிய நாடகம்) | 1 | 4 |
| முன்னேற்றப் பாடல்கள் | 1 | 4 |
| அருட்சுடர் வள்ளலார் | 1 | 4 |
| அரவிந்த யோக தீபிகை | 0 | 8 |
| கல்விக் கதிர் (புதிய கல்வி முறை)-காலிகோ | 1 | 12 |
| சமய சாரம் | 0 | 4 |
| நாடகக் கலை (ஆராய்ச்சி) | 0 | 6 |
| அன்புறுதி | 0 | 4 |
| அன்பு வழி | 0 | 6 |
| மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 0 | 10 |
| ஓவியக் கவி வில்லியம் ப்ளேக் (அச்சில்) | ...... | |
| சிலம்புச் செல்வம் (2-ஆம் பதிப்பு) ( ,, ) | ...... | |
| கலிமாவின் காதல் முதலிய கதைகள் ( ,, ) | ...... | |

**ANBU NILAYAM**

PUBLISHERS & BOOKSELLERS

RAMACHANDRAPURAM (POST)

TRICHY DIST., S. INDIA

